


ஒரு செந்தமிழ் வாரப் பத்திரிகை.

VOL. III. புதுவை, தாது ௵ புரட்டாசி ௴ ௨௰௨ (8—10—36) No.43.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம்.

பொன்செய்தமேனியினீர்புலித்தோலையரைக்கசைத்தீர்
முன்செய்தமூவெயிலுமெரித்தீர்முதுகுன்றமர்ந்தீர்
மின்செய்தநுண்ணிடையாள்பரவையிவள்தன்முகப்பே
யென்செய்தவாறடிகேளடியேனிட்டளங்கெடவே.

உம்பரும்வானவருமுடனேநிற்கவேயெனக்குச்
செம்பொனைத்தந்தருளித்திகழும்முதுகுன்றமர்த்தீர்
வம்பமருங்குழலாள்பாவையிவள்வாடுகின்று
ளெம்பெருமானருளீரடியேனிட்டளங்கெடவே.

உ

திருவருள் துணை.




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.
[திருவாசகம்]

# வித்தகம்

புதுவை

தாது ஹூ புரட்டாசி மீ ௨௰௨

## சாக்காடு.

அழிதன் மாலைத்தாகிய மாயா சம்பந்தமான உடலுயிர், குருவருளால் பெறப்படும் உரிய சாதகங்களை வழுவறத் தாங்கி ஒழுகுதலால், நித்தியத்துவம் பெறும் என்னும் உண்மையை நன்று தெரித்தற்கும், வினை வசத்தாலாய துன்பங்களை அறவே ஒழித்தற்கும், பேரின்பம் அளிக்கும் அமல யாக்கையை ஆக்குதற்கும் உரியதாகிய

சாதலுறுச் சாதல் என்னும் வாய்மையான சாக்காட்டை அடைந்து தமது புலால் தருத்தியைப் பூந்தருத்தியாக மாற்றி — துவிஜத்துவம் அடைந்து நித்தியத்துவம் பெற்ற சித்து மூர்த்தியாகிய

இடைக்காடர் அருளிய மூவடி முப்பது என்னும் அரிய பெரிய தமிழ் மறையில் ஒழிபு என்னும் நான்காம் அத்தியாயத்தில் ஐந்தாம் சூக்தமாகிய இறுதிச் சூக்த மகுடமாகி மிளிர்வது "சாக்காடு" என்பது.

இதற்கு முந்திய சூக்த மகுடமாகிய "மூப்பு" என்பதன் பண்பும் பயனும் "வித்தகம்" தொகுதி 3 இல.42இல் ஷெ சூக்தம் நுதலியவாறு ஒரு சிறிது விளக்கிக் கூறப்பட்டன.

ஈண்டுச் "சாக்காடு" என்பதன் பெற்றி ஒரு சிறிது விளக்கமுற உரைக்கப்படும்.

காமாட்சி பீடம் என்னும் உயரிய தடத்தை அடைந்து அகில சீவர்க்கும் அறிவு ஆற்றல்களில் மூத்தவனாய்— உயர்ந்தவனாய் — மேலான சித்தன் என வதியும் நிலைமையே "மூப்பு" எனவும்,

அதுவே, தன்னிலை முன்னிலை என்னும் இருவகை நிலைகளையும் ஐயம் திரிபு இன்றித் தெளிவுறக் கண்டு ஏற்றவாறு உண்டு உய்தி யடைதற்கு உரியது எனவும்,

சிறியோராகிய புன்மை அறிவுடைய உலக மாக்கள் போற்றுதற் குரிய வாய்மையான புகழுடையது எனவும்,

வாய்மையான சீவ காருண்ணியம் ஆக்க முறுதற்கு இடனாவது எனவும்,

இவ் வாற்றால் இத்தகைய உயரிய நிலையானது உலகோர் பக்குவத்துக்கு ஏற்ற பயன்களைப் பகுத்துக் கொடுக்கும் முறைமையை உடையது எனவும்

"மூப்பு"

என்னும் மேலைச் சூக்தத்தால் கூறிப் போந்த புலவர் பெருமான்

"சாக்காடு"

என்னும் மகுடமுடைய இவ் அருமறையின் இறுதிச் சூக்தத்தால், அத்தகைய வாய்மையான மூப்புக் கைவரப் பெற்ற மெய்யடியான் சாதலுறுச் சாதல் உற்றுத் துவிஜத்துவம் அடைதலின் பெற்றி கூறுகின்றார் என அறிதற் பாற்று.

### மூவடி முப்பது.

———

ஒழிபு. 4

சாக்காடு—சூக்தம். 5

மன்னறி வுறுத்தலின் மன்பதைக் [கிம்மையின்
றுன்புற வொழித்தலின் றொல்லுயிர் [துணிந்த
வின்புறு புக்துட விசைத்தலின் வாழிய.

என்பது சூக்தம்.

சிவஞானிகளுக் குரிய சாதலுறுச் சாதல் என்னும் வாய்மையான சாக்காட்டின் பெற்றியை உணர்த்துதல் நுதலிற்று இச் சூக்தம் என்க.

சாக்காடு என்றால் உடலை விட்டு உயிர் பிரிதலாகிய மரணம் எனவும்,

அதுதான், அசுத்த பௌதிக தநுவாகிய மருளுடம்பு அழிதன் மாலைத்து என்னும் நிச்சயமான உணர்ச்சியை, அதனைச் சகம் என்று நம்பி மாயா போகங்களில் கன்றிய மனத்தராய் உழலும் உலக மாக்களுக்குக் கண்கூடாக அளித்தலாலும்,

எடுத்த உடம்புக்கு வித்தாகிய பிராரத்த வினையால் உளதாகும் இம்மைத் துன்பத்தை அவ் வுலக மாக்களுக்கு நீக்குதலாலும்;

அநாதியான சீவரால் சுகமடைதற் குரியது என நிச்சயிக்கப்பட்டு அன்னவர் உணர்ச்சியால் பற்றிய புதிய உடலமாகிய மறு பிறப்பை அடையச் செய்தலாலும்,

அத்தகைய மரணம் என்னும் சாக்காடு என்றும் நின்று நிலவுவதாக என உலகியலுக்கு ஒப்பியவாறு எம் போலியர் பொருள் காணும் படியும்

உண்மையை நாடும் ஆற்றல் உடையார் அதனைக் குரு வருளால் உணர்ந்து உய்தி யடையும் படியும் அமைக்கப் பட்டது இச் சூக்தம் எனக.

உடலை விட்டு உயிர் பிரிதலாகிய மரணம் உண்மையாற்று மன்பதை மாயா உலக வாழ்வு அநித்திய மென்பதை நிச்சயமாக உணர்ந்து அற நெறியை அவாவுகின்றது. மரணமே நிலையாமையை அறிவிக்கின்றதென்பது பட்டாங்கு.

பின் வரும் பிரமாணங்களும் இவ் உண்மையை நன்று புலப்படுத்துகின்றன.

### சுந்தரர் தேவாரம்.

மணமெனமகிழ்வர்முன்னேமக்கடாய் [தக்தைசுற்றம்
பிணமெனச்சுடுவர்பேர்த்தேபிறவியை [வேண்டேனுயேன்
பணையிடைச்சோலைதோறும்பைம்பொழில் [விளாகத்தெங்கள்
அணைவினைக்கொடுக்குமாரூரப்பனே [யஞ்சினேனே.

(ஷை திருவாரூர்-பண்-இந்தளம் பாசு. 6)

### நாலடியார்.

மன்றங்கறங்கமணப்பறையாயின
அன்றவற்காங்கேபிணப்பறையாய்-பின்றை
ஒலித்தலுமுண்டாமென்றுய்ந்துபோமாறே
வலிக்குமாமாண்டார்மனம்.

(ஷை யாக்கை நிலையாமை செ. 3)

மணத்திற்குக் கொட்டும் பறைகளே பிணத்திற்குக் கொட்டும் பறைகளும் ஆம் என்று நினைத்துப் பெரியோர் மனம் பிறப் பிறப்பு நீங்கி உய்தி யடையும் நெறியையே கடைப் பிடித்து நிற்கும் என்பது இதன் பொருளாகும்.

கணங்கொண்டுசுற்றத்தார்கல்லென்றலறப்
பிணங்கொண்டுகாட்டுய்ப்பார்க்கண்டும் — [மணங்கொண்டீண்(டு)
உண்டுண்டுண்டென்னுமுணர்வினாற் [சாற்றுமே
டொண்டொண்டொடென்னும்பறை.

(ஷை ஷை செ. 5)

மாயா வுலக வாழ்வின் நிலையாமையைச் சாப்பறை அறிவிக்கும் என்பது இதன் பொருளாகும்.

இவற்றால் மரணம் உலக மாக்களுக்கு நிலையாமையை அறிவுறுத்துதல் காண்க.

வினைப் போக தேகம் அழியுங்கால் அத் தேக சம்பந்தமான துன்பமும் ஒழியும். மரணம் இம்மையின் துன்பம் ஒழித்தலின் பெற்றி இதுவே ஆம்.

"வினைப்போகமேயுறுதேகங்கண்டாய் [வினைதானொழிந்தால்
தினைப்போதளவுநில்லாது.............."

என்றனர் பட்டினத் தடிகள்.

உலகோர் பலர் தமது இம்மை வாழ்க்கை மிக்க துன்புறும் வாழ்க்கையாய் ஆற்றொணுத் துயருற்றுழிச் சாதல் நன்று என அதனை விழைவதும் அச் சாக்காடே அவர் துன்புறவை ஒழிப்பதாதலும் கண்கூடு.

எவ்வாற்றானும் இன்பம் விழைதலே சீவ இயற்கை ஆதலால், ஒவ்வொருவரும் தாம் தாம் மரணம் அடைந்த பின் இன்புறுதற் குரிய நற்கதியையே —புத் துடலையே அவாவி நிற்பர்; அடுத்த கதி நற்கதியாக அமைய வேண்டும் என்றே பலரும் தாம் அறத்தாறு எனத் துணிந்தனவற்றைப் புரிவர். மரணம் பிறவி நெறியே ஆம். அதுவே பிறிதோர் உடலை அடையச் செய்கின்றது.

### சுத்தசாதகம்.

மேலோர்நுவடிவையெடுத்ததேயாகின்
மேவுமிவ்வுடலிங்கேவீழும்
மேலொருவடிவையெடுத்ததின்றாகின்
மேவுமிவ்வுடலிங்கேவீழா
மேலொருசிவத்தைச்சீவன்சென்றடையும்
மேவுமிவ்வுடலிங்குத்தானே
மேலொருசிவத்தின்வடிவதாம்அருளாய்
வெளியதாய்உலகுகண்டிடவே.

(ஷை செ.19)

என அம்பிகை யருளால் எழுந்த சுத்த சாதகமும் மரணம் பிறவி நெறியே என்பதை நன்று வலியுறுத்துதல் காண்க.

"இறந்தன பிறக்கும்"

எனப் பட்டினத்தடிகள் அருளியதும் அறிக. (கோயிற்றிருவகவல்)

இவ் அரிய தமிழ் மறைக்கு உலகியலுக்கு ஒப்பியவாறு உரை கண்ட பண்டை ஆசிரியர் கூற்றும் இயைபு பற்றி ஈண்டு காட்டப் படுகின்றது.

"1 பேரிளமை இன்பங்களால் ஏமாப்புறும் மன்பதைக்கு முடிபு ஒன்று உண்டென அறிவுறுத்துவது."

"2. உலகோர் ஆற்றாது அல்லலுற்று அழுங்கும்வழி அவர் துயர்க் கடலாகிய இம்மை முடித்தற்கு இஃது ஓர் கருவியாவது"

"3. அங்ஙனம் முடித்தார் உடம்பு விலங்குங் காலத்து அடுத்த வினை தோற்றுவிக்கும் கதியுட் சென்று புத்துடல் பெறப் பிறிதோர் இன்ப வுலக வாழ்க்கைக்கு அடி கோலி விடுப்பது",

இவ்வாறு மரணம் என்னும் சாக்காடு மன்பதைக்கு மாயா போக வாழ்வின் நிலையாமையை அறிவுறுத்துதலாலும், இம்மையின் துன்புறவை ஒழித்தலினாலும், தொல் லுயிர்க்கு வினை வசத்தால் அவாவிய மறு பிறவியாகிய புத்துடலைச் சேர்த்தலாலும் இத்தகைய சாக்காடு வாழ்வதாக என வாழ்த்தி முடிக்கப் பட்டது.

இவை உலகியலுக்கு ஒப்பிய பொருள்.

மேல் இச் சூக்தத்தின் உண்மைப் பொருள் சிறிது கூறப்படும்.

1

(சாக்காடு) மன்பதைக்குமன் அறிவு [உறுத்தலின்

2

(மன்பதைக்கு) இம்மையின்துன் [புறவுஒழித்தலின்

3

(துணிந்த) தொல்லுயிர்துணிந்த
இன்புறுபுத்துடல்இசைத்தலின்
வாழிய.

அ

சாதலுறுச் சாதலாகிய வாய்மையான சாக்காடானது உடலுயிர் அமலமடைந்து நிலை பெறுதலாகிய நித்தியத்துவத்தை உலகோராகிய மன்பதைக்கு உணர்த்துதலானும்,

ஆ

சகல சீவர்களுக்கும் வினைப் பயனாய் அமைந்த பிறப்பு வளர்ச்சி பசி பிணி மூப்பு இறப்பு என்னும் இம் மண்ணுலக வாழ்வின் துன்பங்களை ஒழித்து விடுதலானும்,

இ

திரிந்து நிலை பெற்ற அநாதியான உயிர் பேரின்ப லாபம் பெறுதற் குரிய திரிந்து நிலை பெற்ற அமல தநுவாகிய புத்துடலை ஆக்கிக் கொள்ளுதலானும்

அத்தகைய சாக்காடு வாழ்வதாக என்பதாம்.

[“மன்பதைக்கு” “துணிந்த” என்பன இடை நிலைத் தீபகமாய் முன்னும் பின்னும் இயைந்து பொருளுணர்த்தி நின்றன.]

மேல் இவ் உண்மைப் பொருள் சிறிது விளக்கமுற உரைக்கப்படும்.

சாக்காடு என்றால் என்னை? அதுதான் மெய் யடியாராகிய சிவஞானிகளுக் குரிய சாதல் — சாதலுறுச் சாதல் என்பது. பின் வரும் பிரபல சுருதியால் விளக்கிக் கூறப்பட்ட சாக்காடு இதுவே ஆம்.

## திருமந்திரம்.

கத்தித் திரிவர் கழுவடி நாய்போல்
கொத்தித் திரிவர் குரக்களி ஞானிகள்
ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே
செத்துத் திரிவர் சிவஞானி யோர்களே.

(ஷை 6ம்- தந். ஞானவேடம்- மந். 4)

மெய் யடியாராகிய சிவஞானிகள் சாதலடைவது என்றால் அவர் உடலை விட்டு உயிர் பிரிவதன்று. மற்று அவ் உடலகத்துள்ள அசுத்தமான கருவி கரணங்கள் அவ் அசுத்தம் நீங்குதலால் சாகாமல் செத்து மாற்றமடைதலே ஆகும். சாதலுறுச் சாதல் என்பது இதுவே ஆம். சீவத்துவம் சாதலடைதல்—ஒழிதல் — தற் சுதந்திரம் ஒழிதல் என்பதும் இதுவே ஆம். காய மாயம் கழிதல் என்பதும் இதுவே ஆம்.

உடல் பழுதடைந்து பிணமாக உயிர் அதனை விட்டுப் பிரிதலாகிய சாதல் என்பது — மரணம் என்பது மெய் யடியாராகிய சிவஞானிகளுக்கு இல்லை. என்? அவர் சரீரத்துள்ள அசுத்த நிறை ஒழிதலால்—திரிதலால் அவ் உடலும் உயிரும் ஒழிவற ஒன்றி நித்தியத்துவம் பெற்றமையால் என்க.

அசுத்த நிறை கேடடைய அமல நிறை ஆக்கமுறும். அஃதாவது அசுத்த நிறையே அவ் அசுத்தம் நீங்கி அமல மாகித் திரியும் என்பது.

“மன்மதைக்கு மன் அறிவு உறுத்தலின்”

இத்தகைய சாக்காடு மன்புதைக்கு உலகினர்க்கு நித்தியத்துவத்தை — உடலுயிர் அழிந்து படாது சிவாங்கமாகி நித்தியத்துவம் பெறுதலாகிய உண்மையை அறிவுறுத்துகின்றது; நித்தியத்துவம் பெறும் என்னும் உணர்ச்சியை வலியுறுத்துகின்றது. மன் என்பது நிலைபேறு — நித்தியத்துவம் எனப் பொருள் படும்.

இத்தகைய சாக்காட்டை அடையும் வரை நித்தியத்துவம் வாய்மையாகாது; நிச்சய மாகாது. ஆதலால் இதுவே நித்தியத்துவத்தை அறிவுறுத்துவது என்க. இப்பெற்றி கைவரப் பெற்று உடலோடு மறைந்து நித்தியத்துவம் அடைந்த தத்துவப் பெரியாரெல்லாம் இதற்கு உறு சான்றாவர்.

“மன்பதைக்கு இம்மையின் துன் [புறவு ஒழித்தலின்”

இத்தகைய சாக்காடே இம்மை என்னும் இம் மண்ணுலக வாழ்வுக் குரிய துன்பங்களை—இப் பூவுலகில்—மாயாப் பிரபஞ்சத்தில் சகல சீவர்களுக்கும் வினைப் பயனாய் இயற்கையாய் அமைந்த துன்பங்கள் யாவற்றையும் அறவே ஒழித்து விடுகின்றது.

பிறப்பு, வளர்ச்சி, பசி, பிணி, நரை, திரை, மூப்பு, இறப்பு, என்னும் துன்பங்களை — ஊனங்களை அறவே ஒழித்து விடுகின்றது; ஒழித்து உலவா இன்பமாகிய பேரின்பத்தை அளிக்கின்றது.

பேரின்பமே வீடு பேற்றின்பம் எனப் படுவது.

“அதுதான் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காடு அவலக் கவலைக் கையாற்றி னீங்கி மணியினது ஒளியும் மலரினது நாற்றமும் சந்தனத்துத் தட்பமும் போல உண்ணின் றெழுதரு மொரு பேரின்ப வெள்ளத்தது”

என்பது இறையனார் களவியல் உரை.

துன்பம் யாவற்றையும் அறவே ஒழித்து-மும் மலங்களையும் ஒழித்துப் பேரின்பம் நல்குவது சாதலுறுச் சாதலாகிய வாய்மையான சாக்காடேயன்றி, உடலை விட்டு உயிர் பிரிதலாகிய உலகியலுக்கு ஒப்பிய சாக்காடாகிய மரணம் அன்று.

சரீரம் பிணவியல் அடைதலாகிய மரணத்தால் அப் பிறவியில் அநுபவமாய் அமைந்த பிராரத்த வினையால் ஆய துன்பம் ஒழிவதே யன்றி—அப் பிறவிக் குரிய வினை வித்து ஒழியதே யன்றி, மேற் பிறவிகளுக்கு வித்தாய் அமைந்த சஞ்சித வினையும், அப் பிறவிக்கண் ஆகாமியமாய் ஈட்டிச் சஞ்சிதமாய்க் கூடிய வினையும் ஒழிந்தன ஆகா.

ஆதலால் உலகியலுக்கு ஒப்பிய சாக்காட்டினுல் துன்பம் முழுவதும் ஒழிதலும் அதனுல் பேரின்ப லாபம் பெறுதலும் அசம்பாவிதமே ஆகும்.

சாதலுருச் சாதலாகிய வாய்மையான சாக்காட்டினுற்றான் சீவத்துவம் அறவே ஒழிந்து சிவத்துவம் திகழும், "தான் அவன் ஆகும் சமாதி"—வாய்மையான சமாதி கைகூடும். இதனுல் துன்பங்கள் அறவே ஒழியும்.

இப் பெற்றி கைவரப் பெற்றவரே "ஊனமில் காயம்" உடைய சீவன் முத்தர் என அறிக. இவ் "ஊனமில் காயமே" சிவ வடிவம். இவ் அமல வடிவம் எதனுல் உளதாயிற்று? சீவத்துவம் சாதலடைதலாகிய சாதலுருச் சாதலினுற்றான் — உடலுயிரில் உள்ள— உடலுயிராய் அமைந்த அசுத்த நிறை கேடடைதலாகிய வாய்மையான சாக்காட்டினுற்றான் உளதாயிற்று என்க.

"ஊனமற்ற காயமாய் இருப்பன் எங்கள் [ஈசனே"

என்றனர் எம் அண்ணலாகிய சிவ வாக்கியர்.

இத்தகைய ஊனமில் காயமாகிய சிவ வடிவம் உலகியலுக்கு ஒப்பிய சாக்காடாகிய மரணத்தை அடையும்—பிணவியலடையும் என்று நினைக்கவும் சொல்லவும் படுமோ?

இத்தகைய அமல வடிவமாகிய பிரணவ வடிவமே அருளாய் வெளியாய் பரத்தில் பரமாகிய ஞானுகாசத்தில் ஒடுங்குவது என்க.

### திருமந்திரம்.

தானவ னுகுஞ் சமாதிகை கூடினுல்
ஆன மலமறு மப்பசுந் தன்மைபோம்
ஊனமில் காய மிருக்கும் இருசிவத்(து)
ஊனங்கள் எட்டும் ஒழித்தொன்று வோர் [கட்கே.

(ஷை 8ம்- தந். நின்மலாவத்தை மந். 17)

[பசுத் தன்மை போதல்—சாதலுருச் சாதலடைதல்—சீவத்துவம் கெடுதல். ஊனமில் காயம்—அசுத்த நிறையாகிய ஊனம் ஒழிந்த அமல தநு; "இன்புறு புத்துடல்." "என்னையும் இருப்பதாக்கினன்" (திருவாசகம்—திருவண்டப்பகுதி) என மணிவாசகர் அருளியதும், "நந்தி யருளாலே நான் இருந்தேனே" (திருமந்திரம்) என எம் அண்ணல் அருளியதும் அறிக.

ஊனங்கள் எட்டு—பிறப்பு வளர்ச்சி (அசுத்த நிறை அமைந்த மருளுடம்பின் ஆக்கம்) பசி, பிணி, நரை, திரை, மூப்பு, இறப்பு.

ஒன்றுவோர் — அருளாய் வெளியாய் பரத்தில் ஒடுங்குவோர் "பொழிகின்ற இவ் உடல் போம் அப் பரத்தே" (திருமந்திரம் — விசுவக்கிராசம்) என எம் அண்ணல் அருளியதும் அறிக.

சாதலுருச் சாதல் என்னும் சாக்காடானது தன்னை அடையப் பெற்ற மெய்யடியார்க்கு "இம்மையின் துன்புற"வை—இம் மண்ணுலக வாழ்வுக்குரிய துன்பத்தை இப் பூவுலகில் ஒழித்துப் பேரின்பம் அளிப்பதாகும் என்பது பின்வரும் பிரமாணங்களாலும் வெள்ளிடை ஆம்.

### அப்பர் தேவாரம்.

பிறப்புமூப்புப்பெரும்பசிவான்பிணி
இறப்புநீக்கிஇங்குஇன்பம்வந்தெய்திடும்
சிறப்பர்சேறையுட்செந்நெறியான்கழல்
மறப்பதின்றிமனத்தினுள்வைக்கவே.

(ஷை திருச்சேறை— திருக்குறுந் தொகை [பாசுரம். 3)

["இங்கு இன்பம் வந்து எய்திடும்" என்பது "இம்மையின் துன்புறவு ஒழித்தல்" என்பதன் பொருளை நன்று விளக்குதல் காண்க.]

நாமார்க்குங்குடியல்லோநமனையஞ்சோம்
நரகத்திலிடர்ப்படோநடலையில்லோம்
ஏமாப்போம்பிணியறியோம்பணிவோ [மல்லோம்
இன்பமேயெந்நாளுந்துன்பமில்லை
தாமார்க்குங்குடியல்லாத்தன்மையான
சங்கரநற்சங்கவெண்குழையோர்காதிற்
கோமாற்கேநாமென்றுமீளாவாளாய்க்
கொய்ம்மலர்ச்சேவடியிணையேகுறுகி [னோமே.

(ஷை திருமறுமாற்றத்திருத் தாண்டகம் [பாசுரம். 1)

### சுந்தரர் தேவாரம்.

மண்ணுலகிற்பிறந்துநும்மைவாழ்த்தும் [வழியடியார்
பொன்னுலகம்பெறுதல்தொண்டனேன் [இன்றுகண்டொழிந்தேன்
விண்ணுலகத்தவர்கள்விரும்பவெள்ளை [யானையின்மேல்
என்னுடல்காட்டுவித்தானொடித்தான் [மலையுத்தமனே.

(ஷை திருநொடித்தான்மலை-பண்-பஞ்சமம் [பாசுரம். 6)

"பொன்னுலகம் பெறுதல் தொண்டனேன் இன்று கண்டொழிந்தேன்" என்பதனுல் "இம்மையின் துன்புறவொழிதல்" நன்று பெறப்படுதல் காண்க.

மனம் எனும் பெரிய மத்த யானையாகிய காட்டானை சாதலுருச் சாதலடைந்து வெள்ளை யானையாக—தூய உள்ளமாக—அமலமாக மாற்ற மடைந்தமையே — வாசி வசப்பட்டமையே துன்புற வொழிதற்குக் காரணம் என்பது இப் பாசுரத்தின் 3-ம் 4-ம் அடிகளால் விளக்கப்பட்டது.

"இன்று கண்டொழிந்தேன்" என தமது அநுபவத்தையே கூறியருளினர் வன்றொண்டப் பெருமான் என அறிக.]

இவ் வாற்றால், சாக்காடு "இம்மையின் துன்புற வொழித்தலின்" பெற்றி ஒரு சிறிது விளக்கப் பட்டது.

"துணிந்த தொல்லுயிர் துணிந்த
இன்புறு புத்துடல் இசைத்தலின்"

சாதலுருச் சாதலாகிய சாக்காடு, திரிந்து நிலை பெற்ற உயிர் திரிந்து நிலை பெற்ற புத்துடலை புத்துடலாகிய அமல தநுவை இசைத்துக் கொள்ளச் செய்கின்றது. அஃதாவது புலால் தருத்தியை அழித்து—சாதலடையச் செய்து பூந் தருத்தியை ஆக்கிக் கொள்ளுகின்றது என்பது.

[துணிபு ஈண்டு நிலைபேறு என்னும் பொருட்டு.]

## திருவாசகம்.

"......அறக்கிலேன்உடல்துணிபட......."
(ஷை செத்திலாப்பத்து-பாசுரம். 6)

என்றனர் மணிவாசகர்.

உடல் அமல மடைந்து நித்தியத் துவம் பெறுமாறு அதனைச் சாத லுருச் சாதலடையச் செய்கிலேன் என்பது இதன் பொருளாகும். தூலத்தைக் கெடுத்து—வாட்டி—சாத லடையச் செய்து அத் தூலத்துக்கும் உயிருக்கும் துணிபு உண்டாக்கல்; நிச்சயம் — உறுதி — அழிவின்மை உண்டாக்கல் என்பது கருத்து.

பின் வரும் பிரமாணம் மணிவாசகர் உடலுயிர் சாதலுருச் சாதலால் அசுத்தம் நீங்கி அமல மடைந்த மையை — துணிபு என்னும் உறுதி பெற்றமையை—நித்தியத்துவம் பெற்ற மையை—இன்புறு புத்துடல் இசையப் பெற்றமையை நன்று புலப்படுத்துவன ஆகும்.

## திருவாசகம்

"...........
ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென்
[உள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடி..........."
(ஷை திருத்தெள்ளேணம் பாசு. 18)

"...........
பூவில் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை ஒழியச் செய்த ஒண்
[பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
...........
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்
[பவும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழில்நகை யெரியின்
வீழ்வித் தாங்கன்(று)
அருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை ஒடுக்கினன்
தடக்கையி னெல்லிக் கனியெனக்
[காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியே னாயேன் றானெனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்
கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியு மொல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரைபுரைவித்
துவாக்கடல் நள்ளுநீ ருள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுத மயிர்க்கால் தோறுந்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்
[தழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்தேன் பாய்த்தி
[நிரம்பிய
அற்புதமான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறு மேற்றினன் உருகுவ
துள்ளம் கொண்டோ ருருச்செய் தாங்
[கெனக்கு
அள்ளூ றாக்கை யமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.
(ஷை திருவண்டப்பகுதி.)

இருள் இனிக்கெழுந் திட்டதோர் வல்
[வினைச் சிறுகுடி யிதுவித்தைப்
பொருளெனக் களித் தருநா கத்திடை
[விழப்புகு கின்றேனைத்
தெருளு மும்மதில் நொடிவரை யிடிதரச்
[சினப்பதத் தொடுசெந்தீ
அருளு மெய்ந்நெறி பொய்ந்நெறி
[நீக்கிய அதிசயங் கண்டாமே.
(ஷை அதிசயப்பத்து பாசுரம். 10)

என்புள் ளுருக்கி யிருவினையை யீடழித்
[துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மை
[செய்து
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக்
[கொண்டன்றே.

["முன்புள்ள வற்றை முழுதழிய" என்பது உடலில் உள்ள அசுத்த நிறை ஒழிதலாகிய சாதலுருச் சாத லையே — சாக்காட்டையே குறித்த தாகும்.]

கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடல மாண்டிவன் பேரமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ணம் நான
[ணுகும்
அம்பொன் குலாத்தில்லை யாண்டானைக்
[கொண்டன்றே.
(ஷை குலாப்பத்து பாசுரம் 3,6.)

## குறள்.

நத்தம் போற் கேடு முளதாகுஞ் சாக்
[காடும்
வித்தகர்க் கல்லா லரிது.
(ஷை 24-ம் அதி. புகழ். 5)

எனவும்,

புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பி
[னுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு.

எனவும் வரூஉம் அருமணி அனைய தேவர் திருவாக்குக்களும் "உளதா கும் சாக்காடு" என்னும் சாதலுருச் சாதலால் "இன்புறு புத்துடல்" ஆகிய "புக்கில்" என்னும் அமல தநு அமை ந்து நித்தியத்துவம் வகைவரப் பெற தலையே ஒன்றும் போத அறிவிக்க

ளாகிய எம் போலியர்க்குத் தடக்கை நெல்லி என விளக்கிக் காட்ட எழுந்தன ஆகும் என்பதில் எட்டுணையும் ஐயப்பட ஆமோ?

அமல நிறை ஆக்க முறுதலாகிய நத்தமும் அசுத்த நிறை அழிவு பெறுதலாகிய கேடும் அதனால் சாதலுறுச் சாதலாகிய "உளதாகும் சாக்காடும்" அதனால் இன்புறு புத்துடலாகிய —பேரின்ப லாபம் பெறுதற்குரிய அமல யாக்கை கைவரப் பெற்று நித்தியத்துவம் அடைதலும் காமாட்சி பீடம் என்னும் உயரிய தடத்தை அடைந்த மெய் யடியார்க்கே யன்றி ஏனைய உலக மாக்களுக்கு முற்றாக முடியாத காயரிமே ஆம்.

பின் வரும் வேத மந்திரங்களும் இத்தகைய சாக்காட்டினால் இன்புறு புத்துடல் இயைந்து நித்தியத்துவம் பெறுதலையே வாய்மையில் உணர்த்த எழுந்தன ஆகும்.

## பிருகதாரண்ய உபநிடதம்.

———

### அத்தியாயம்4 பிராம்மணம்4 மந்திரம்3.

"தத் யதாத்ருண ஜலாயு காத்ருணஸ்ய அந்தம் கத்வா அந்யம ஆக்ரமம் ஆக்ரம்ய ஆத்மாநம் உப ஸம்ஹரதி |"

"ஏவம் ஏவ அயம் ஆத்மா இதம் சரீரம் நிஹத்ய அவித்யாம் கமயித்வா அந்யம் ஆக்ரம்ய ஆத்மாநம் உபஸம் ஹரதி ||"

புல்லட்டையானது தான் இருந்த புல்லின் நுனியை அடைந்து மற்றோர் புல்லைப் பற்றிக் கொண்டே முன்னைய புல்லை விடுதல் போல, இந்த ஆத்மாவானது மற்றொரு பிண்டமாகிய சரீரத்தைப்( கருவை)பற்றிக் கொண்டே முன்னைய சரீரத்தைப் பிணமாக்கி அதன்பால் உள்ள தனது தொடர்பை நீக்கிக் கொள்ளுகின்றது என இதன் தூலப் பொருள் கூறப்படுகின்றது.

### ஷ-மந்திரம் 4.

"தத்யதாபேஷஸ்காரி பேஷஸோ மாத்ராம் உபாதாய அந்யம் நவதரம் கல்யாண ரூபம் தநுதே. |"

"ஏவம் ஏவ அயம் ஆத்மா இதம் சரீரம் நிஹத்ய அவித்யாம் கமயித்வா அந்யம் நவதரம் கல்யாண ரூபம் குருதே. ||"

தட்டான் பொன்னில் ஓரளவை எடுத்துக் கொண்டு வேறு புதிதான மங்களகரமான ஆபரணத்தைச் செய்வது போல, இந்த ஆத்மாவானது எடுத்த சரீரத்தைப் பிணமாக்கி விடுத்து வேறு புதிதான மங்களகரமான சரீரத்தை ஆக்கிக் கொள்ளுகின்றது என இதன் தூலப் பொருள் கூறப் படுகின்றது.

உடலை விட்டு உயிர் பிரிதலாகிய மரணம் பிறவி நெறியே என்பதற்கும், மறு பிறப்பு இல்லை என வாதிப்போர்க்கு அஃது உண்டே என உதாகரித்துக் காட்டுவதற்கும் இம் மந்திரங்கள் தூலப் பொருளால் பயன் படுகின்றன என்று கூற ஆம்.

ஆனால், இவற்றின் உண்மைப் பொருள் வேறு. தத்துவப் பெரியாராகிய மகர்ஷிகள் அருளிய மறைகள் எல்லாம் சிவர்கள் படிப்பு வல்லபத்துக்கு எட்டாத தத்துவார்த்தம் உடையனவே ஆம்.

மகர்ஷிகள் நிஷ் பிரயோசனமான அசம்பாவிதமான இத்தகைய வாதங்களுக்குச் சமாதானங்களைத் துருவி ஆராய்ந்து அவற்றை உலக மாக்களுக்கு வெளிப் படுத்துவதே தொழிலாகக் கொண்டு இயங்கினவர் அல்லர்.

அஃதாவது தற்கால மேலைத் தேச விஞ்ஞான சாத்திர விற்பன்னர் எனப் போற்றப் படும் வெள்ளையர் சிலரும் அவர் நெறியை அநுசரித்து ஆராய்ச்சிகள் புரியும் பிறர் சிலரும் போல "மரணத்தின் பின் மனிதர் நிலை" என்பன போன்ற வியர்த்தமான ஆராய்ச்சிகள் புரிந்து காலங் கழித்தவர் அல்லர்.

மற்றோ. வாய்மையைக் கண்டு அதற்குரிய சாதனங்களைக் கைக்கொண்டு ஒழுகி அச் சாதனங்களின் பெற்றியை —பெட்பை — அருமை பெருமையை உணர்ந்து

அவற்றை வெளியிடுதற்கே அஃதாவது அத்தகைய உந்நதமான அறத்தாறுகளால் சரீரத்துக்கு அந்தயானதும்—கடையானதும் கடையாயும் உள்ளாயும் இயங்குவதும் இயவுள் எனப் படுவதுமாகிய ஒன்றை (அந்தம்) நிறை கொண்டு பிடித்து ஆடி ஆடி உறவு கோலால் முறுக வாங்கிக் கடைந்து ஆலத்தை ஜீவார்மிதம் என்னும் அமுதாக்கி அதனை உண்டு உண்டு அதனால் சூக்கும சரீரம் (தாதுக்கள்) வலுத்து,

அதனால் படி முறையே தூலமும் அழிந்து—சாதலுறுச் சாதல் என்னும் சாக்காடு அடைந்து—மாறிப் பிறந்து அடைய வேண்டிய பேற்றை அடைய வேண்டும் என்பதனையும் இன்னோரன்ன பல வற்றையும்—அதி சூஷ்மமான பயில்வுகளின் பெட்பையும் பக்குவர்கள் தங்கள் தங்கள் பக்குவத்துக்கு ஏற்ப உணர்ந்து படியேற்றம் பெறுதற் குரிய நிலைமையை அங்கை ஆமலக மென விளக்கிக் காட்டுவதற்கே கௌண பதங்கள் அமைந்த நிறை முறையான கற்பனைகளால் அநேக நூல்களாகிய மறைகளை மகர்ஷிகள் அருளிச் செய்தனர் என்பது மறுக்க முடியாததே!

ஒருவன் தனக்கு உரியதான ஊரை விட்டுப் புறப்பட்டு நெடுந்தூரம் மாசக் கணக்காக வருஷக் கணக்காக யாத்திரை செய்து நீளச் சென்றவன் என்றால்,

அவன் தன் வீட்டைத் திரும்ப அடைதற்கு யாது செய்ய வேண்டும்?

தான் சென்ற தடங்களால் திரும்பி அடி பெயர்த்து அடி பெயர்த்து வந்தே தனக்குக் கடையான — முடிபான — சொந்தமான — என்ஞான்றும் தான் வசிக்கும் இடமான — தன் யாத்திரைக்கு அந்தமான இடத்தை — வீட்டை அடைய வேண்டியவன் அல்லவா?

(அந்தம் என்றால், மீண்டு வீடு பெற்ற பின்பு யாத்திரை பூர்த்தி பெற்றது — முடிபு பெற்றது என்பது பொருளாகும்)

இவ்வாறு மீண்டு அடி பெயர்த்து இயங்குதல் எங்ஙனம்? எனின், புல்லட்டையானது — புழுவானது ஒன்றைப் பற்றி ஒன்றை விடுதல் போல ஓர் படியில் நிற்பவன் அப் படிக்கு அப்பால் இருக்கும் படியைப் பற்றி நின்ற படியை விட்டு மேற் செல்லுதலாம் என அறிதற் பாற்று.

மேற் செல்லுதலாகிய ஆரோகணப் பெற்றியே சாகாமல் சாதல் என்பது — சாக்காடு என்பது.

மேலே காட்டிய மந்திரங்களில் "அவித்யாம் கமயித்வா" என்னும் சொற்றொடருக்கு சரீரத்தை அசேதனமாக்கி — பிணமாக்கி எனப் பொருள் கோடல் தகாது. அஃதாவது இது உலகியலுக்கு ஒப்பிய போலிப் பொருளாகிய பொய்ப்பொருளே யன்றி உண்மைப் பொருளன்று என்பது.

அஃது எங்ஙனம்? எனின், கூறுதும்:—

அ + வித்யா என்பது வித்தை அற்றது எனப் பொருள் படும். வித்யா என்பது யாது? எனின், அது தான் திரோதாயி என்னும் இயக்க உருவம் தாங்கிப் பொலிந்து சீவர்கள் மலங்களைப் பக்குவப் படுத்தும் பேராற்றல் என்று கூறப்படும்.

சரீரம் மாறிப் பிறந்த ஆங்கு திரோதாயி செயலற்றுத் தனக்குத் தானே சுழன்று கொண்டு இருப்பாள். ஆதலால் இவளை "அவித்யா" என்றனர் தத்துவப் பெரியார் என அறிதற் பாற்று.

அவித்தை என்றால் அஞ்ஞானம் என்பர். காரண சரீரம் அவித்தை எனின்; தூலம் சூக்குமத்திலும் சூக்குமம் காரணத்திலும் ஒடுங்கும் என்கின்றனரே! ஞானமானது அஞ்ஞானத்தில் (காரண சரீரம்) ஒடுங்குவது தான் முத்தியோ? விபரீதம்! விபரீதம்! உலகம் தலை தடுமாறி நிற்கின்றது!

திரோதாயி ஞானசத்தி ஆக்கப் பட்டாள் என்பதே "அவித்யாம் கமயித்வா" என்பதன் உண்மைப் பொருளாகும். திரோதாயி மாண்டு ஞான சத்தியானாள் — சாதலுறச் சாதலால் ஞான சத்தி வடிவம் ஆகிய அமல தநு — பிரணவ வடிவம் உளதாயிற்று — சீவன் முத்தி நிலை பூரணப் பட்டது என்பதே பொழிப்பு.

இதனால் ஆன்மா என்றும் சரீரம் என்றும் வாளா கூக்குரலிட்டுத் திரிந்த நிலைமை கெட்டது — சம்ஹாரமானது; ஆன்மா சரீரம் என்னும் (உப) இரண்டும் சம்ஹாரமாயின. (உப ஸம்ஹரதி) இச் சம்ஹாரமே ரக்ஷகத்துவமாகப் பொலிந்தது என்க.

உடலும் உயிரும் ஒழிவற ஒன்றி ஞான சத்தி வடிவாய் நித்தியத்துவம் பெறும் பெற்றி இதுவே என்க.

"சரீரம் நிஹத்ய அவித்யாம் கமயித்வா
........ஆத்மானம் உப ஸம்ஹரதி"

என்பதன் உண்மைப் பொருள் இதுவே ஆம். "சரீரம் நிஹத்ய" என்பதே மருளுடம்பு சாக்காடடைதல் — சாதலுறச் சாதலடைதல் என்பது.

மேலே கூறிய புழுவின் உபமானமும் இதற்கே பொருத்தமாம்.

வித்தையே வித்து; வித்தின்றி வித்தை இல்லை. ஆதலால் "உணக்கிலாததோர் வித்து மேல் விளையாமல் இருவினையும் ஒத்த" இடமே (திருவாசகம் — திருக் கழுக்குன்றப் பதிகம்) வித்து அற்ற இடம் — வித்தை அற்ற இடம் — அ + வித்யா என அறிதற் பாற்று.

அவித்யா என்றால் தானே தானாய் நின்ற இடம் — தன்னின் வேறொன்றில்லாத இடம் — காணாத இடம் — யாவும் தானாய் நின்ற இடம் — அறிய வேண்டியது ஒன்றும் இல்லாத (அறியாமை) இடம் என்க.

இடைக்காடர் பெருமானால் "ஒழிபு" எனக் கூறப்பட்ட தடம் இதுவே ஆம்.

தனக்குத் தானே — தானே தானாய் இயங்கும் இடம் — சுழலும் இடம் இதுவே. இதனைத் தான் காரண சரீரம் என்ப; அஞ்ஞான தடம் என்ப.

தெரிந்து கொள்ள வேண்டியதொன்று இல்லாத இடம் ஆதலால் — துவந்துவங்கள் தூய்மை அடைந்த இடம் ஆதலால் — தன்னிலை முன்னிலை படர்க்கை என்னும் திரிபடி அற்ற இடமாதலால் — திரிபுடியும் ஒரு புடியாக நின்ற இடம் ஆதலால் — புன்மை யறிவுடைய எம் போலிய சீவர்கள் இதனை அறியாமையான இடம் என்று கூறினர் — கூறுகின்றனர் — கூறுவர்.

உண்மை அறிந்தோர் இவ் விடந்தான் அண்ட சராசரங்களும் தன் மாத்திரைகளாகத் திரிந்து எவ் வகையான சுட்டுணர்வு மின்றித் தாமே தாமாய் இயங்காமல் இயங்கும் இடம் என்ப.

இவ் அவித்தை யினின்று காமம் என்னும் ஆசையால் இயக்கம் விசர்க்கம் பெற்று நீண்டு வியாபித்தது உலகம். ஆதலால் இவ் உலகமும் அவித்தை என்றும் அஞ்ஞானம்

என்றும் கூறப்படும். வியாபகம் என்னும் அவித்தை பங்க முடையது—குற்ற முடையது—விஷ குண முடையது—மயக்க முடையது. ஆதலால் அஞ்ஞானம் என்னும் அறியாமை உடையது—திணை மயக்கம் பெற்றுத் திரிவது என்க.

இவ் வாற்றால் காரண சரீரம் என்னும் அவித்தைக்கும் வியாபகம் என்னும் போலியான—போலிக் குரிய அவித்தைக்கும் இடையீடு கண்டு கொள்க.

போலியை உண்மை என்பது கயவரைத் தேவர் எனக் கூறுவது போலும் எனக் கொள்ளற் பாற்று.

## குறள்.

———

தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

(ஷை 108ம்- அதி. கயமை. செ.3)

என்பது காண்க.

"தட்டான் அபரஞ்சியில் ஓர் அளவை எடுத்து ஆபரணம் செய்வது போல சிவன் என்பவன் எதிலிருந்து எந்த அளவை எடுத்து மற்றோர் மங்களகரமான சரீரத்தைச் செய்கின்றான் என்னும் கடாவுக்கு சமாதானம் யாண்டுளது? உபமானம் பொருந்த வேண்டாமா? இருடிகள் முனிவர்கள் அருளிய கண்ணியம் வாய்த்த கனமான வாக்கியங்கள் அன்றோ இம் மந்திரங்கள்! உபமானத்துக்கு ஒப்ப உபமேயத்தைப் பொருத்திப் பொருள் காண வேண்டும் அல்லவா?

## பிருகதாரண்ய உபநிடம்.

———

ஷை மந்திரம். 4

இச் சூத்திரப் பொருள் வாய்மையையே உணர்த்துகின்றது. தட்டான் அபரஞ்சியின் ஓர் அளவை எடுத்து மங்களகரமான வேறோர் அபரஞ்சி ஆபரணத்தை — பொற் பணியை — உருவத்தை ஆக்குகின்றான் — உருப் படுத்துகின்றான்.

இஃதே போல்,

குருவருள் பெற்ற பக்குவ சீவனாகிய மாணவன் தன் உழப்பால் சுந்தரமான திரு நீற்றை திரு நீறு என்னும் பொற் சுண்ணத்தை உற்பத்தி செய்கின்றான்—ஆக்குகின்றான்.

ஆக்கிக் கண்ட ஆங்கு அச் சுண்ணம் என்னும் திரு நீற்றை அணிந்து — உண்டு (அணிதலே கொள்ளல் — உண்ணல் என்பது) மலக் குரம்பையை —இருள் மயமான புலால் துருத்தியை அழித்து—சாதலுறாச் சாதலடையச் செய்து அந் நீற்றினால் — பொற் சுண்ணத்தால் மங்களகரமான உருவத்தை "இன்புறு புத்துடல்" ஆகிய அமல தநுவை ஆக்கிக் கொள்ளுகிறான் என்பதே பொருளாகும்.

திரு ஞானசம்பந்தப் பெருமான் அருளிய திரு நீற்றுப் பதிகமும், மணிவாசகர் அருளிய திருப் பொற் சுண்ணப் பதிகமும் தத்துவப்பெரியார் பாடல்கள் பிற பலவும் இத் திரு நீற்றின் மாண்பை நன்று புலப் படுத்துவன வாகும்.

## திரு ஞானசம்பந்தர் தேவாரம்.

———

முத்திதருவதுநீறு முனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறுதக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறுபரவவினியதுநீறு
சித்திதருவதுநீறுதிருவாலவாயான்திருநீறே.

"............பெருந்தவத்தோர்களுக்
[கெல்லாம்
ஆசைகெடுப்பதுநீறுஅந்தமதாவதுநீறு
......................................"

(ஷை திருநீற்றுப் பதிகம் பாசுரம். 3, 5;

[அந்தம் — ஒழிபு — தானே தானுய் இயங்கும் இடம்.]

## திருவாசகம்.

———

"முன்னீறுமாதிபுமில்லான்முனிவர்குழாம்
பன்னூறகோடியிமையோர்கள்தாம்நிற்பத்
தன்நீறெனக்கருளி..............................."

என மணிவாசகர் தாம் அடையப் பெற்றதாகக் கூறி யருளிய வாய்மையான திரு நீறும் இதுவே ஆம்.

பின் வருஞ் பிரமாணங்கள் மேலே கூறிய கருத்தை நன்று வலியுறுத்துதல் காண்க.

## பிரமோத்தர காண்டம்.

———

எழுகோடிமந்திரமுமெண்ணில்தவமு
[மிருநிலத்தில்
ஆழமுடையகங்கைமுதலனந்தநதியுமவ
[ரேசன்
வீழுந்தாகமீறுமவ்வேள்வியனைத்தும்
[விளம்புங்கால்
தாழுஞ்சடையோன்திருநீறு
[தரும்பேறென்றுந்தாராவே.

பத்தியால்வெண்ணீறணிந்தோர்
[பாரைப்போதுநீங்கிடப்புரந்து
துய்த்தபோகத்திறுதியினிற்சோதி
[விமானத்தினிமேலறி
மைத்தகுழலாரொடுமருவி
[மகவான்பதத்தில்வாழ்ந்து பின்னர்ச்
சத்தாய்சத்தையோருவுசிவ
[சாயுச்சியமேசார்வாரால்.

இவ் வாற்றால். சாதலுறாச் சாதல் என்னும் சாக்காடானது நித்தியத்துவம் பெறுதற் குரிய

"இன்புறுபுத்துடல்இசைத்தலின்"

பெற்றி கண்டு கொள்க.

சாதலுறாச் சாதலாகிய சாக்காட்டினால் இன்புறு புத்துடலாகிய அமல தநு அமையப் பெற்ற சிவன் முத்தர் அருளாய் வெளியாய் ஞானாகாசத்தில் ஒடுங்குதல் சொல்லாமலே அமையும். ஆதலால் வேதாகமாதி நூல்கள் இதனை வெளிப் படையாகக் கூறுவதில்லை; கூற வேண்டியதில்லை.

சிவத்துவம் ஒழிதலாகிய—உடலுயிர் சாதலுருச் சாதலடைதலாகிய சாக்காடு கூறப்படவே அவ் உடலுயிர் அமல மடைந்து பாத்தில் ஒடுங்குதலாகிய முத்திநிலை சொல்லாமலே அமையுமாதலால பக்குவர்கள் இவ் உண்மையை எளிதில் அறிந்து கொள்வார்கள்.

"சாக்காடு"

என்னும் இச் சூக்தத்தால் முத்தி நிலை உய்த் துணர வைக்கப்பட்டதென்பது வெள்ளிடை ஆம்.

இது பற்றியே "சாக்காடு" என்பது மூவடி முப்பது என்னும் இவ் வரிய பெரிய தமிழ் மறையின் இறுதிச் சூக்த மகுடமாயிற்று என அறிதற் பாற்று.

காமாட்சி பீடம் என்னும் உயரிய தடத்தை அடைந்து தனது விருப்பம் யாவும ஒழியப் பெற்றுச் சாதலுருச் சாதலடையப் பெற்றவன் உடலை விட்டு உயிர் பிரிவதில்லை எனவும் அவன் அருள் வடிவாய் அருளிற் கலப்பன் எனவும் பின் வரும் வேதப் பிரமாணமும் நன்று வலியுறுத்தி நின்றமை காண்க.

பிருகதாரண்ய உபநிடம்.

"அத அகாமயமா நோயோ—காமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்ம காமோ நதஸ்ய ப்ராணு உத்க்ராமந்தி ப்ரஹ்மைவஸந் ப்ரஹ்மமாப்யேதி. |"

(4. 4. 6)

எவன் பற்றில்லாதவனோ எவனது விருப்பங்கள் எல்லாம் அகன்றனவோ எவன் விருப்பங்களை யெல்லாம் அகன்று திருப்த னுனோ எவன் தன்னை அகன்று (தான் என்பது அற்று—சாதலுருச் சாதலடைந்து) ஈசனிடத்தில் புகலிடங் கண்டானோ அவன் பாசத்தினின்றும் விடுபட்டவனுவன். அவனது உயிர் அவன் உடலை விட்டுப் பிரியாது அவன் அருண் மயமாகவே நின்று அருளில் கலப்பான் என்பது இதன் பொருளாகும்.

சாதலுருச் சாதலால் இன்புறு புத்துடலாகிய அமல தநுவை அடைந்து அதனோடு நித்தியத்துவம் பெறுதலாகிய முத்தி நிலை மஹா பாரதம் என்னும் இதிகாசத்தில் உத்தியோக பர்வத்து 43-ம் அத்தியாயத்திலும் கூறப்பட்டுள்ளது. ஷை சுலோகம் 4; 23.)

ஷை பர்வத்தில் "ஸநத் ஸுஜாதீயம்" எனப் பெயரிய 40—45-ம் அத்தியாயங்களுக்கு வியாக்கியானம் செய்தருளிய

ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளும்

"சீவன் முத்தன் மரண மடைய மாட்டான்—அவன் உடலை விட்டு உயிர் பிரியாது"

என்னும் வேத உண்மையை விளக்கிக் காட்டி யுள்ளார்கள். (ஷை 43-ம் அதி. 23-ம் சுலோக வியாக்கியானம்)

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்தில் ஸ்ரீ ராம பிரானும் பரத சத்துருக்நரும் இலக்குமணரும் உடலோடு ஒளியில் கலந்தனர் என்னும் உண்மையை விளக்கமாக உரைக்கும் சுலோகங்களின் கீழ்,

[ஷை உத்தர காண்டம் சர்க்கம் 110—சுலோகம் 12; ஷை சர்க்கம்106 சுலோகம்17]

இந் நூலுக்குத் "திலகம்" எனப் பெயரிய அரியவுரை வியாக்கியானம் எழுதிய வட இந்திய தேச வாசியாகிய ஸ்ரீமத் இராமர் என்னும் பெரியார் பிராகிருத சரீரம் சாதலுருச் சாதலடைந்து திவ்ய சரீரமாகிய அமல தநுவாய் மாற்ற மடையும் முறையைக் குறித்துச் சிறிது கூறுகின்றனர். இவற்றை யெல்லாம் ஈண்டுக் காட்டி விளக்கப் புகின் மிகப் பெருகும்.

எமது ஆப்த நண்பரும், உண்மையை நாடி உழைக்கும் உத்தமரும், எமது "வித்தக" அபிமானியும், மஹா வித்வப் பெரியாருமாகிய

ஜோதிர் பூஷணம் வேதாரணியம் ப்ரம்ஸ்ரீ Dr. V. V. ரமண சாஸ்திரிகள் M. A; Ph D. Etc.

அவர்களால் ஆராய்ந்து கண்டு எமக்கு வழங்கப் பட்ட இவ் வரிய பிரமாணங்கள் அமயநேருங்கால் எடுத்துக் காட்டி விளக்கிக் கூறப்படும்.

குரு நெறி கடைப் பிடித்து வாய்மையான "அழகை" ("வித்தகம்" தொகுதி 3 இல. 40, 41 பார்க்க) என்னும் சாதகத்தைக் கைக்கொண்டு ஒழுகுதலால் இத்தகைய சாக்காட்டை அடையப் பெறாது வேறு தடம் புகுந்து பேரின்ப லாபம் பெறுதல—"இன்புறு புத்துடல்" என்னும் திவ்ய சரீரமாகிய அமல தநுவைப் பெற்று நித்தியத்துவம் அடைதல் அஃதாவது அருளாய் வெளியாய் உலகு கண்டிட உடலோடு மறைந்து உண்மைச் சைவ முத்தியடைதல் முடியாத காரியமே ஆகும்; அசம்பாவிதமே ஆகும்.

ஆதலாற்றான் சாதலுருச் சாதலாகிய—ஊனம்-அறவே ஒழிந்து உடல் அமல மடைதற்குரிய இத்தகைய சாக்காடே நித்தியத்துவம் அளிப்பது என வற்புறுத்துபவராய் இதனைத் தாம் அருளிய தமிழ் மறையின் இறுதிச் சூக்தமாக வைத்து இதன் அருமை பெருமை தோன்ற இதனை

"வாழிய"

என மணிவாய் மலர்ந்து வாழ்த்தி இச் சூக்தத்துக்கு முற்றுத் தந்து இவ் அருமறையை மங்களகரமாக முடித்தருளினர் சங்கப் பலகையை நிலை குலைத்த ஒப்புயர்வில்லாத திப்பிய புலவர்

சிங்கமும் நித்தியத்துவம் பெற்ற தத்துவப் பெரியாருமாகிய எமது இடைக்காடர் பெருமான் என அறிதற்பாற்று.

உலகியலே நிறையோடு தழுவுதலே உய்யும் நெறி என அறியாது மாண்டு போனவர் சிலர் எழுதி வைத்த நெறியல்லா ஈன நெறிகளைத் தழுவி அவ்வுலகியலே வெறுத்து—சிற்றின்பத்தை வெறுத்து ஒருபால் ஒதுங்கிப் புருஷார்த்தங்களை இழந்து பிறவி வலைப்படும் உலக மாக்களுக்கு,

குருவருளால் உலகியலாகிய சிறுவாழ்வு என்னும் சிற்றின்ப வாழ்வை நிறையோடு தழுவுதலே புருஷார்த்தங்களை அடையும் நெறி என—எல்லாச் சாதியாளர்க்கும் எல்லாச்சமயத்தவர்க்கும்—சகல ஜீவராசிகட்கும் உரிய சத்திய நெறியாகிய நித்தியத்துவ நெறி என வற்புறுத்துவான் எழுந்த "மூவடி முப்பது"

என்னும் இத்தெய்வத தமிழ்மறை

"உலகம்"

என்னும் மங்கல மொழியான் அங்குரம் பெற்று அநுபவ முறையாகிய படிமுறையான் ஆக்கமுற்று

அத்தகைய இயற்கை நெறியான் அடையப்படும் பூரணதத்துவ நிலையாகிய அமலநிலை என்னும் நித்தியத்துவ நிலையை வெள்ளிடை விலங்கலென விளங்கக்காட்டி

"வாழிய"

என்னும் மங்கல மொழியால் பூரணப்பட்டு நின்றதென அறிக.

ஜீவகாருண்ணிய மூர்த்தியாகிய இப்பெரியார் அருளிய

"உலகம் வாழிய"

என ஆதியும் அந்தமும் ஆய் நின்ற இம்மங்கல மொழிகள், உலகம் பேரின்ப வாழ்வு பெற்று உய்தி படைதலே இத்தெய்விக மறையின் பயன் என உணர்த்துதலோடு, இத்தகையப்பயனை அடைந்து உலகோர் உய்தியடைக என அவர்க்கு ஆசி கூறியருளிய வண்ணமும் ஆம் என அறிதற்பாற்று.

மேலும் விரிப்பிற் பெருகும்.

இதுகாறும் கூறியவைகளால் மூவடிமுப்பது என்னும் அரிய பெரிய தமிழ் மறையில் ஒழிபு என்னும் நான்காம் அத்தியாயத்தில் 5ம் சூக்தமாகிய இறுதிச் சூக்த மகுடமாகி மிளிரும் "சாக்காடு" என்பதன் பெற்றி ஷை சூக்தம் நுதலியவாற்றான் ஒருவாறு உணரத்தகும்.

சுபம்.

மூவடி முப்பதுஎன்னும் தமிழ் வேத சூக்தமகுட விளக்கவுரை முற்றிற்று.

மூவடி முப்பது என்னும் தெய்வத் தமிழ்மறை நீடு வாழ்க.

இடைக்காட்டுச் சித்தர் பெருமான்

திருவடி வாழ்க.

சைவம் தழைக.

[குறிப்பு]

மூவடி முப்பது என்னும் தமிழ் வேத சூக்த மகுடங்களையே பீடிகையாகக் கொண்டு "வித்தகக்' கட்டுரைகளாய்—பத்திரிகைக்கு உரிய முறையாக அவகாசத்துக்கு ஏற்றவாறு விளக்கி எழுதப்பட்ட இவ்விரிவுரை இடையிடையே வேண்டிய மாற்றங்களோடு குறைபாடுகளை நிறைவு படுத்தி மிகச் சமீபகாலத்தில் புத்தக வடிவமாக வெளியிடப்படும்.

[ப—ர்]

காசி ஹநுமான்காட்
**T-S-சீதாராம ஐயர் அவர்கள்**
எழுதுவது.
(தொகுதி3. 39-ம் வாரத் தொடர்ச்சி)

ஷை ஸதஸ்ஸில் ஏற்பட்ட நான்காவது வினவும், அதின் தீர்மானமும். "யாதாமொரு யதி, தன்னை சங்கராசார்யாள், என்ற பெயருடன் விளம்பரஞ் செய்து கொண்டும், பீடாசார்யர்களுடைய அடையாளங்களை வகித்துக் கொண்டும் திக் விஜயத்திற்காக வெளியில் புரப்படலாமா கூடாதா? வென்புதா. இதற்கு உத்தரம், சாஸ்திர ரீதியாய் பகவத்பாதா சார்யாளால் ஸ்தாபிக்கப்பட்ட மடங்கள் நான்கே என்றும் இம் மடாதிபதிகள் நால்வர்களை ஜகத்குரு ஆசார்ய பதவிகளுக்கு அர்கர்களென்றும், இவர்கள் தான் ஜகத்குருத்வ அடையாளங்களுடன் ஸஞ்சாரங்கள் செய்யலா மென்றும், ஆசார்ய ஸம்பிரதாயங்களும் நான்கே என்றும் தீர்மானிக்கபட்டது. இத் தீர்மானமானது காசி வாஸிகளாகவும் ஜகத் பிரஸித்தர்களான சாஸ்திர பண்டிதர்களாகவும் உள்ள பிரும்ம நிஷ்டர்களின் கைபொப்பம (80)ம், பரமஹம்ஸர்களான யதீசுவரர்களின் கைபொப்பம்(10) அடங்கியதாக வுள்ளது.

1934ம் வருஷத்தில் ஸ்ரீ காசிபுரிக்கு நூதனமாக வரவிருந்த மடாதிபதிகளை எந்த விதமான அந்தஸ்த்தில் இங்கு வரவேற்பது என்ற விஷயமாய் ஏற்பட்ட வித்வத்ஸதஸ்ஸானது ஸ்ரீ காசி ஸாக்ஷி விநாயகர் கோவிலிற் கெதிராகவுள்ள பிகாரிபுரி மடத்தில் வைத்து நடந்தது. இந்த ஸதஸ்ஸிற்கு அக்ராஸனம் வகித்தவர், பிரும்ம ஸ்ரீ ஹாராண சந்திர பட்டாரி, என்ற சாஸ்திர வித்வான். இச் சபைக்கு பரமஹம்ஸ யதீசுவரர்கள், மஹந்துகள் வித்வாம்ஸர்கள் ஆசார்ய பக்த கோடிகள் ஸதஸ்யர்களாக விருந்தார்கள். ஸபையின் நோக்கமென்ன வென்பதைப் பற்றிய பிரஸங்கம் ஆரம்பிக்கும் சற்று முன்னதாக, ஹிந்தி பாஷையில் அச்சிட்ட விளம்பரம் ஒன்று தர்மவீர அங்கராஜு சுப்புராய சர்மா என்ற ஒப்பமிட்டு, ஷை ஸபையில் சேராத ஒருவரால் ஸபையோர்கள் யாவருக்கும் கொடுக்கப்பட்டது. ஷை விளம்பரத்தை" தமிழில் மொழிபெயர்த்து வித்தகம்" தொகுதி (3) 2,3 வாரத்திய பத்திரிகையில், மறைகண்ட நம்பி, தத்வநிதானம் ஸ்ரீமான்

[அடுத்த பக்கம் பார்க்க.]

[11-ம் பக்கம் தொடர்ச்சி]

D. சுப்பிரம்மண்ய அய்யர் என்பவரால் வெளியிடப்பட்டு ஷ்டி விளம்பரத்திற்கு ஆக்ஷேபணையும் எழுதியிருக்கிறார்.

ஷ்டி "ஹிந்தி விளம்பரத்தைப்' படித்துப் பார்த்த ஸபையோர்கள், யாவரும் இவ் விளம்பரமானது நூதனமாக இங்கு வரவிருக்கும் மடாதிபதிகளின் தரப்பில் ஷ்டி மடாபிமானிகள், இங்குள்ள ஆசார்ய பக்தர்களால் ஏற்கனவே அறிக்கை விளம்பரமாகவும், பத்திரிகை வியாஸமாகவும், எழுதியிருந்தவைகளிற்கு ஜவாபபு போல நினைத்துக் கொண்டு ஷ்டி மடத்துச் சிலவிலேயே தான் இவ் விளம்பரமச்சிடப்பட்டிருக்கிறதெனபதாக தம்மில் தம்மில் பேசிக்கொண்டார்கள்.

ஸபையின் நோக்கத்தைப் பற்றி பிரஸங்கமும் சாஸ்திர வாதமும் தீர்மானமும் ஹிந்தியில் இருப்பதால் அவைகளை தமிழில் மொழிபெயர்த்து அடுத்த வியாஸத்தில் எழுதுகிறேன்

(தொடரும்)